





உ

சிவமயம்.

# திருவண்ணாமலைப் பதிகம்.

இஃது
வில்வாரணி சண்முக சுவாமிகள்.
இயற்றியது.

திருவண்ணாமலை
குகன்—அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றது

விபவஹு தைமீ 1உ

1868

உ

சிவமயம்.

# திருவண்ணாமலைப் பதிகம்.



## பண் பழம் பஞ்சுரம்.

### எழுசீர்கழிநெடிலடியாசிரியவிருத்தம்



1. பாதியாய் முற்று மாதியாயுனைப்
பற்றினே னெனைக் காத்தருள்
பேதியா நிற்கும் பூமியாமுதல்
காயமானவைம் பூதமாய்
நாதமாய் நாதப்பொருளுமாய் நின்ற
நம்பனே யுனை யன்றியான்
இதறவேறு தெய்வ நம்பலேன்
திருவண்ணாமலை ஈசனே

2. கங்கையைத்தரித் தருளுந்தேவனே
கடையனைக்கண்ணிற் பார்த்தருள்
மங்கையாங்காரைக் காலென்னம்மையை
மாதவே யெனச்செசாற்றவா
பங்கைப்பாதியைபார்வதிக்கீந்த
புண்ணியாவென்றனெண்ணையா
திங்களைச்சூடுந் தேவதேவனே
திருவண்ணா[illegible]ல ஈசனே,

3. நாலுபத்து காற்றலையனையன்று
கல்லின்கீழுற றிந்றித்தவா
பாலுக்குப்பாலன்னழுதிடும்போது
பசிதணித்திட்டவேதனே
சீலத்துக்குரியன்னல்லாத
தீயனேன்றனை யாளையா
சாலவேகாலாற் காலனைச்செற்ற
திருவண்ணாமலை ஈசனே,

4. கோதறக்கண்ணனீந்தநல்லூரு
கோளிலாதுண்ட கொற்றவா
வோத நீர்ச்சடைக்கொண்டருள்செய்து
வேர்மெனும்மோனசை வடிவனே
நீதமில்லாத நீசனேனையும்
நீக்கிடாதருள் புரிகுவாய்
தீதமற்ற மெய்ஞ் ஞானிகட்டுகி
திருவண்ணாமலை ஈசனே,

5, ஆரணம்புகலப்பரியன்றிரு
வாசிலா தேவ நாட்டினில்
பூரணப் பெருவொமெனுஞ்சொல்லை
பெட்புடன் கேட்டுச்சிறையினில்
ஆரணங்குற விருத்திவைத்தொரு
வுருகணையருளையனே
தோரணமெங்குந்தூங்கிடப்பெறும்
திருவண்ணாமலை ஈசனே.

6, அஞ்சினோர்க்கருளப்பனென்றுனை

படியனேனும்வந்தணுகினேன்

நெஞ்சினானினைப்பின்றியென்னையு

நீக்கிடாதருள் புரிகுவாய்

வஞ்சிவல்லிகளேறிடும்மா

மேலயர்ந்திடுமந்திகள்

தெஞ்சிவந்திடும் தெய்வநாயக

திருவண்ணாமலை ஈசனே

7, கோலமாமறை பாடிடும் வேதன்

கோலமுந்தேடும்பாதனே

சீலமில்லாதசேரலார்தமை

செற்றிடும்பால லோசனா

பாலசந்திரன் சூடிடும்முனை

பாவியேனு நினைப்பினே

சாலவேதேவ சேத்திடும்பிக

திருவண்ணாமலை ஈசனே

8. கார்வணன்றதி செய்புமுன்னையுங்
கடையனேனு நினைப்பனோ
பார்வண்முத லட்டமூர்த்தியாய்
பரந்து நின்றபராபரா
சீர்வணமுற ஞானிகட்டுதி
தேவனேயெனையாளுவாய்
தேர்வணமுறை தெய்வநாயக
திருவண்ணமலை ஈசனே

9: சூதிலாழிக்கொருவன்கானிடை
சோர்விலாத்தவஞ்செய்யவே
யேதிலாருடற்றுணித்திடப்படை
யெழிலுடன்றந்த வெந்தையே
காதிடுந்நிரு தன்சலந்தரன்
கழிந்திடச்செற்ற கண்ணுளே
தீதிலாதெனை யாண்டருபுரி
திருவண்ணமலை ஈசனே.

10. சிதமாமதி சூடிடப்பெறுந்
திருவண்ணுமலை யீசனை
ஆதரித்திடுமெப்பனன்பனை
யம்பிகையொரு பாகனை
கிதமார் திருவண்டு மொய்த்திடுங்
கொன்றைவியணி தேவனை
நிதமும்படி சொன்ன சொல்லிவை
சொல்லு வார்க்கில்லை துன்பமே

திருச்சிற்றம்பலம்

## வெண்பா

சண்முகன் பாவாந் திருவருணை மேற்பதிக
மொண்பாக்குகன்பிரசிலச்சிட்டா—னுண்மை
யா—யிப்பாடல் போற்றுவாரிவ்வுலகிலீசனுற்
செப்பமாய் வாழ்வார் செழித்து.





உ

சிவசுப்பரமண்ணியர் துணை

குகன் அச்சுக்கூடம் திருவண்ணாமலை.